# ஜனசக்தி

தின இதழ்

ஆசிரியர்: ப. ஜீவானந்தம்.

பக்கம் 4 விலை 1 அணு இலங்கையில் 10 சதம் (விமானத் தபால்)

மலர் 13] சென்னை 6-9-56, துன்முகி ஆவணி—வியாழன் 22 (வெளியூர் 7-9-56 ஆவணி—வெள்ளி 23) [இதழ் 23


### செவ்வாய் கிரகத்தில் வெள்ளைத் திட்டுக்கள்

மாஸ்கோ, செப். 5—

செவ்வாய் கிரகத்தின் தென் பகுதியில் பிரகாசமான வெள்ளைத் திட்டுக்கள் பரவலாகக் காணப்படுவதாயும், அவைபனிக் கட்டிகளாக இருக்கக்கூடும் என்றும், கார்கோவ் நகர சர்வகலா சாலையைச் சேர்ந்த ரஷ்ய விஞ்ஞானிகள் கூறுகின்றனர்.

### ரஷ்யாவுக்கு சென்னை கல்லூரி பிரின்ஸ்பால்

சென்னை, செப். 6—

இம்மாதம் 12-ந் தேதியன்று சோவியத் ரஷ்யாவுக்குப் புறப் படவிருக்கும் இந்தியக் கல்வி மான்களின் தூதுகோஷ்டியில் சென்னை எத்திராஜ் பெண்கள் கல்லூரி பிரின்ஸ்பால் ஸ்ரீமதி மோனுஹெனஸ்மென்னும் ஒருவர் என்று அறிவிக்கப்படுகிறது.

# பின்தங்கிய வகுப்பினர் 11 கோடி

## அதிக சலுகைகள் தேவை

## காகா கலேல்கர் குழுவின் ஆலோசனைகள்

### சர்க்காரின் தீர்ப்பு

புதுடெல்லி, செப். 4—

இந்திய அரசியல் சட்டத்தின் 340வது பிரிவின் பிரகாரம் காகா கலேல்கர் அவர்கள் தலைமையில் 1952ல் நியமிக்கப்பட்ட பிற்பட்ட வகுப்பார் குழு தமது ரிப்போர்ட்டை சர்க்காருக்கு சமர்ப்பித்துவிட்டது. இந்தியாவில் பிற்பட்ட வகுப்புகள் உண்டென்றும் இவர்கள் இந்தியாவின் ஜனத்தொகையில் 11 கோடி மக்கள் என்றும் இவர்கள் சமூகத்துறையிலும் கல்வித்துறையிலும் பின்தங்கிய நிலையில் இருக்கிறார்கள் என்றும் அந்தக் குழுவின் ரிபோர்ட் கூறுகிறது

இந்தப் பிற்பட்ட வகுப்பினரை முன்னேற்ற சர்க்கார் விசேஷ கவனம் செலுத்த வேண்டுமென்றும், குறிப்பாகத் தொழில், தொழில் நுட்பக் கல்விகளில் 70 சதவிகிதம் ஸ்தானங்கள் இவர்களுக்கு ஒதுக்க வேண்டுமென்றும் கலேலகர் குழு அறிவித்தது.

இந்த அறிக்கையுடன் இந்திய சர்க்காரின் உள்நாட்டு மந்திரி ஞாபகக்குறிப்பு ஒன்றும் தயாரித்து அதை ராஜ்ய சர்க்கார்களுக்கு அனுப்பியுள்ளார். அதில் ராஜ்ய சர்க்கார்கள் தங்கள் தங்கள் ராஜ்யத்திற்கு ராஜ்ய அட்ஹாக் கமிட்டிகள் நிறுவவேண்டுமென்றும் அந்த கமிட்டிகள் தங்கள் ராஜ்யத்திலுள்ள பிற்பட்ட வகுப்பினர் பட்டியலைத் தயாரித்து மேலும் ஸ்தூலமாக்க வேண்டும் என்றும் கேட்டுக் கொள்ளப்பட்டுள்ளது.

பிற்பட்ட வகுப்பினர் மேம்பாட்டிற்காக மத்தியிலும் ராஜ்யங்களிலும் பிரத்தியேக இலாக்காக்கள் அமைக்கலாமெனக் கமிஷன் கூறி இருப்பது அவசியமானால் அவ்விதமே நடத்தலாம் என்று மத்திய சர்க்கார் மகஜர் கூறுகிறது.

பின் தங்கிய வகுப்பினரில் தாழ்த்தப்பட்ட வகுப்பினர், மலை ஜாதியினர் தவிர பாக்கி எவருக்கும் விசேஷ அரசியல் பிரதிநிதித்துவ சலுகை கொடுக்கக் கூடாதென கமிஷன் கூறியுள்ளதை சர்க்கார் ஏற்றுக் கொண்டுள்ளது.

மத்திய ராஜ்ய சர்வீசுகளில்

(2-ம் பக்கம் பார்க்க)

### சென்னை-ஆந்திரா எல்லை

#### நவம்பருக்குள் தீர்வு இல்லையாம்!

சென்னை, செப். 5—

ராஜ்யக் கல்வி மந்திரிகளின் மகாநாட்டுக்காக டில்லிக்குச் சென்ற கல்வி மந்திரி ஸ்ரீ. சி. சுப்ரமண்யம், மத்திய சர்க்காருடனும், ஆந்திர முதன் மந்திரி கோபால் ரெட்டியுடனும் பேச்சு வார்த்தை நடத்தினர்.

அவரிடம், நவம்பர் மாதத்துக்குள் ஆந்திர எல்லைப் பிரச்னை தீர்க்கப்படுமா என்றுகேட்டதற்கு, 'அது சாத்தியமாயிராது' என்று பதில் அளித்தார்.

### விபத்துபற்றி

## ரயில்வே மந்திரியின் அறிக்கை

### விவாதிக்க சபாநாயகர் வாக்குறுதி

புது டெல்லி, செப். 5—

ஹைதராபாத்தில் மஹபூப் நகர் அருகில் ஏற்பட்ட ரயில் விபத்தை நேரில் சென்று பார்வையிட்டு டில்லி திரும்பிய ரயில்வே மந்திரி லால் பகதூர் சாஸ்திரி, இன்று லோக சபையில், விபத்தைப் பற்றியவிசாரணையின் ரிபோர்ட்டை விரைவில் அனுப்பி வைக்கும்படி ரயில்வே இன்ஸ்பெக்டரிடம் கூறப்பட்டிருக்கிறது என்று தெரிவித்தார்.

அந்த ரிபோர்ட் கிடைத்த பிறகு, நீதிபதியைத் தலைமையாகக் கண்ட ஒரு கமிட்டி மூலம் விசாரணை அவசியமா என்பதை பிறகு முடிவு செய்து கொள்ளலாம் என்றும் குறிப்பிட்டார். இந்த விபத்துக்கு ரயில்வே நிர்வாகம்தான் காரணம் என்று ரயில்வே இன்ஸ்பெக்டரே தீர்ப்புக் கூறிவிட்டால், பிறகு மேற்கொண்டு வேறு விசாரணை அவசியமில்லாமல் போய் விடும் என்றும் ஸ்ரீ சாஸ்திரி குறிப்பிட்டார்.

விசாரணை சம்பந்தமாகத் தங்கள் அதிருப்தியைத் தெரிவித்து புரொபஸர் ஹீரென் முகர்ஜி, (கம்யூனிஸ்ட்), [illegible] (பி-சோ.) டி. பி. விட்டல் ராவ் (கம்யூனிஸ்ட்) டாக்டர் லங்கா சுந்தரம் (சுயே), கி. பி. மேத்தன் (காங்) ஆகியோர் பேசினர்.

ரயில்வே இன்ஸ்பெக்டரின் ரிபோர்ட்டின்மீது விவாதிப்பதற்கு அங்கத்தினர்களுக்குப் பிறகு சந்தர்ப்பம் அளிக்கப்படும் என்று சபாநாயகர் உறுதி கூறினர்.

### தாய்மொழியில் தத்துவம் போதிப்பீர்!

#### ராஜாஜி யோசனை

சென்னை, செப். 5—

சேத்துப்பட்டு பச்சையப்பன் கல்லூரியில் தத்துவ சங்க ஆரம்ப விழாவில் பேசிய ராஜாஜி, "சமஸ்கிருதம், தமிழ் இதர இந்திய மொழிகளிலேயே தத்துவ சாஸ்திரம் போதிக்கப்படவேண்டும். சரியான வார்த்தைகள் நமது இந்திய பாஷைகளிலேயே உள்ளன. ஆங்கிலத்தில் இல்லை" என்றார்.

### பொதுத் தேர்தலில்

## காங்கிரஸை எதிர்க்க இடதுசாரிக் கூட்டணி

### நிருபர்களிடம் அஜய் கோஷ் விளக்கம்

கௌஹாத்தி, செப். 4—

அடுத்த பொதுத் தேர்தல்களில் காங்கிரஸை எதிர்ப்பதற்கு இதர இடதுசாரிக் கட்சிகளுடன் ஒரு ஐக்கிய முன்னணி ஏற்படுத்திக்கொள்ள ஒரு உடன்பாட்டுக்கு வருவதற்குக் கம்யூனிஸ்ட் கட்சி தன்னாலான எல்லா முயற்சியும் செய்யும், என்று இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் பொதுக்காரியதரிசி தோழர் அஜய்கோஷ் இங்கு பத்திரிகை நிருபர்களிடம் பேசுகையில் குறிப்பிட்டார்.

தோழர் அஜய் கோஷ் மேலும் பேசுகையில், "அத்தகைய ஐக்கிய முன்னணி, முடிந்தால் ஒரு பொதுவான குறைந்தபட்சத் திட்டத்தை அடிப்படையாகக் கொண்டிருக்கும். பார்லிமெண்டிலும், சட்டசபைகளிலும் ஜனநாயகத் தன்மை கொண்ட எதிர்ப்பை பலப்படுத்துவதே அத் திட்டத்தின் நோக்கமாக இருக்கும்" என்றார்.

அத்தகைய ஒரு உடன்பாட்டுக்கு வருவதற்காக, இதர இடதுசாரிக் கட்சிகளுடன் மாகாண மட்டங்களில் பேச்சு வார்த்தைகள் நடைபெற்று வருகின்றன. என்றும் தோழர் அஜய் கோஷ் குறிப்பிட்டார்.

நாட்டைப் புனரமைப்பதற்கு சர்க்கார் கையாண்ட வழி, முறை, ஆகியவற்றையும் நிலச் சீர்திருத்தத்தையும் இத் தேர்தலில் முக்கிய பிரச்னைகளாகக் கொண்டு கம்யூனிஸ்ட் கட்சி போட்டியிடும், என்றும் அஜய் கோஷ் குறிப்பிட்டார்.

அவர் மேலும் பேசுகையில் "சர்க்காரின் அயல்நாட்டுக் கொள்கையுடன் எங்களுக்குப் பூரணமாக உடன்பாடு உண்டு.

"2வது ஐந்தாண்டுத் திட்டத்தைக் கொள்கை ரீதியில் நாங்கள் ஏற்றுக் கொள்ளுகிறோம்.

ஆனால் அதை நிறைவேற்றுவதற்கு தேயிலை, நிலக்கரி, சணல் முதலிய பெரிய தொழில்களை தேசவுடைமையாக்குவதன் மூலம் பணம் திரட்டவேண்டுமே தவிர அதிக நோட்டுகள் அடிப்பதின் மூலமாக அல்ல; ஏனெனில் ஆதலால் நாட்டில் பணவீக்கம் ஏற்படும்" என்றும் குறிப்பிட்டார்.

தேர்தல்களைப்பற்றிப் பேசுகையில், கேரளா, மேற்கு வங்காள சட்டசபைகளில் கம்யூனிஸ்ட் கட்சிக்கு மெஜாரிட்டி ஸ்தானங்கள் கிடைக்கலாம் என்றும் குறிப்பிட்டார்.

### "சுதந்திர நாகர் நாடு" கோஷம் சரியல்ல

நாகர்களின் பிரச்னையைப் பற்றி தோழர் அஜய் கோஷ் குறிப்பிடுகையில், "சுதந்திர நாகர் நாடு" வேண்டும் என்ற கோஷத்தைக் கம்யூனிஸ்ட் கட்சி பலமாக எதிர்க்கிறது என்று குறிப்பிட்டார். ஏனெனில் அது நாட்டு நலவுரிமைகளுக்கும், நாகர்களின் நலவுரிமைகளுக்குமே பாதகமானது என்றும், அது ஏகாதிபத்திய வாதிகளின் தளமாக மாறும் ஆபத்து ஏற்படும் என்றும் குறிப்பிட்டார்.

பார்லிமெண்டில் பிரதம மந்திரி ஆக. 23ந் தேதியன்று முன் வைத்த பிரேரணைகளை நாகர்கள் ஏற்றுக்கொண்டு, இந்திய சர்க்காருடன் பேச்சுவார்த்தைகளை நடத்துவதே தகராறைத் தீர்க்கும் வழி என்றும் குறிப்பிட்டார்.

ஆனால், அதேசமயத்தில் நாகர் பிரச்னை வெறும் சட்டம், அமைதிப் பிரச்னையாக மட்டும் இந்திய சர்க்கார் பார்க்கக் கூடாதென்றும், இந்தியாவின்மீது நாகர்களுக்குள்ள பயத்தைப் போக்க, இந்திய சர்க்கார் நாகர் தலைவர்களுடன் பேச்சு வார்த்தைகளைத் துவக்கவேண்டும் என்றும் கேட்டுக்கொண்டார்.

### இறந்தோர் தொகை 121 ஆகிறது

ஹைதராபாத், செப். 5—

இன்று மேலும் 4 சவங்கள் கண்டெடுக்கப்பட்டன. இத்துடன், ரயில் விபத்தில் இறந்தோர் தொகை 121 ஆகிறது.

#### எகிப்திய தூதரின் அனுதாபம்

இந்தியாவில் எகிப்தின் ஸ்தானிகராயுள்ள டாக்டர் மொஸ்தபா கேமல், மஹபூப் நகர் ரயில் விபத்தைக் கேட்டு மிகுந்ததுக்கமடைந்ததாக ஒரு செய்தியை ஜனாதிபதி ராஜன்பாபுவுக்கு அனுப்பியுள்ளார்.

## லக்ஷத் தீவுகளுக்கு பார்லிமெண்டில் பிரதிநிதித்வம்

### கம்யூனிஸ்ட் பிரேரணையை சர்க்கார் ஏற்றது

புதுடெல்லி, செப். 5—

அரசியல் சட்ட (9-வது திருத்த) மசோதாவின் மீது லோக் சபையில் விவாதம் தொடர்ந்து நடைபெற்றபோது, லக்ஷத் தீவுகளுக்கும், அமினிதிவிஸ் தீவுகளுக்கும் பார்லிமெண்டில் ஒரு பிரதிநிதித்வம் கொடுக்க ஒப்புக் கொள்வதாக உள்நாட்டு மந்திரி பந்த் இன்று தெரிவித்தார்.

இத்தகைய பிரதிநிதித்வம் வேண்டுமென்று நேற்றைய தினம் கம்யூனிஸ்ட் மெம்பர் கே. கே. பாசு கோரியிருந்தார்.

ஆனால் அந்தமான் நிகோபார் தீவுகளுக்கு "சுபாஷ் த்வீபம்" என்று பெயரிட வேண்டுமென்று தோழர் பாசு கொண்டுவந்த திருத்தத்தை சர்க்கார் ஏற்றுக்கொள்ளவில்லை. சபையும் நிராகரித்தது.

டாக்டர் சுரேஷ் சந்திரா (காங்), வி. ஜி. தேஷ்பாண்டே (இந்து மகாசபா), மதுரா பிரசாத் மிஸ்ரா (காங்), ஹீரென் முகர்ஜி (கம்யூ) ஆகியோர் அந்தமான் தீவுகளின் பெயரை மாற்றியமைக்க வேண்டுமென்பதை ஆதரித்தனர்.

### கீழ்பவானி ராஜ வாய்க்கால்

#### செப். 15ல் திறக்கப்படும்

சென்னை, செப். 5—

கீழ் பவானி அணையின் ராஜ வாய்க்கால் முழுவதையும் 124/3 மைல் வரையிலும் நீர்ப்பாசனத்துக்காக செப். 15 லிருந்து திறந்து விட சர்க்கார் தீர்மானித்துள்ளது.

இதனால் மொத்தம் சுமார் 2 லக்ஷம் ஏகரா நிலத்துக்கு பாசன வசதி கிடைக்குமாம்.

### அமெரிக்காவின்

## போர்த்தந்திரம் மாறுகிறதாம்

## ஐஸன்ஹோவர் அறிவிப்பு

### ரஷ்யாவுக்கு ஈடுகொடுக்கவாம்

வாசிங்டன், செப். 5—

பயமுறுத்தலையும், ஆயுத பலத்தையும் நம்புவதை விட்டுவிட்டு, இன்று ரஷ்யா புதிதாக பொருளாதார பிரச்சார தந்திரத்தைக் கையாள முற்பட்டுள்ளதாக இன்று அமெரிக்க ஜனாதிபதி ஐசன் ஹோவர் பத்திரிகை நிருபர் கூட்டமொன்றில் கருத்து வெளியிட்டார்.

சோவியத் யூனியனின் இந்தப் புதிய கொள்கைக்கு ஈடு கொடுக்கும் முறையில் அமெரிக்கா தனது திட்டத்தை வெகுவாக மாற்றிக் கொண்டு வருவதாகவும் அவர் தெரிவித்தார்.

ஜினிவா மகாநாடு போன்று இன்னொரு வல்லரசு மகாநாடு நடத்துவது குறித்து அவரிடம் கேள்வி கேட்கப்பட்டபோது, இத்தகைய மகாநாட்டைத் தற்போது தாம் கூட்டுவது சாத்தியமில்லை என்று அவர் கூறினர்.

ஜனசக்தி
தின இதழ்
ஆசிரியர்: ப. ஜீவானந்தம்.

ஆசிரியர் குழு :
எம். ஆர். வெங்கட்ராமன், பி. ராம மூர்த்தி, எஸ். ராமகிருஷ்ணன், கே. முத்தையா நிர்வாகஆசிரியர்.

வியாழன் 6—9—56

## பின் தங்கிய வகுப்பார்

மத்திய சர்க்காரால் நியமிக்கப் பட்ட காகா கலேல்கர் குழு, பின் தங்கிய வகுப்பாரைப் பற்றிய தன்னுடைய ஆய்வுரை "ரிப்போர்ட்டை" சமர்ப்பித்து விட்டது. அரசாங்கமும் அதைப் பற்றிய தன் கருத்தை, உள் நாட்டு அமைச்சரின் யாதாஸ்தாக வெளியிட்டிருக்கிறது.

கல்வித் துறையிலும் சமுதாய வாழ்விலும் பின் தள்ளிக் கிடக்கும் வகுப்பார்களை, பின் தங்கிய வகுப்பார் என்று வரையறுத்து, கலேல்கர்குழு 'ரிப்போர்ட்'சமர்ப்பித்திருக்கிறது. பின் தங்கிய வகுப்புகள் 2399 என்றும் அவர்களுடைய ஜனத்தொகை 11 கோடி யென்றும் 'ரிப்போர்ட்' கூறுகிறது. மத்தியிலும் ராஜ்யங்களிலும் இந்த வகுப்பாரின் மேம்பாட்டுக்காக, தனி இலாகாக்கள் நிறுவ வேண்டுமென்று குழு யோசனை கூறியிருக்கிறது.

பின் தங்கிய வகுப்பார் பட்டியலைத் தயாரிக்கும் பொறுப்பை ராஜ்ய சர்க்கார்களுக்கு விட்டு விட வேண்டுமென்பது மத்திய சர்க்காரின் கருத்து. அதோடு, சாதி, மத, இன வேற்றுமையின்றி, பின் தங்கிய வகுப்பார்களுக்கு எல்லா உதவிகளும் அளிக்கப்பட வேண்டும் என்ற குழுவின் சிபார்சை, இந்திய சர்க்கார் ஏற்றுக்கொண்டிருக்கிறது. மேலும், தாழ்த்தப்பட்ட வகுப்பினர், மலை சாதியினர் நீங்கலாக மற்றவர் யாருக்கும் அரசியல் தனிப் பிரதிநிதித்வச் சலுகை அளிக்க [illegible] குழுவின் யோசனை [illegible] ஒப்புக்கொள்ளப் பட்டிருக்கிறது.

பாராளு மன்றத்தில், இது பற்றிய சர்க்காரின் முடிவுகளை உள் நாட்டு அமைச்சர் கூறும்பொழுது, "தேவைப்பட்டால் பின் தங்கிய வகுப்பு மக்களின் முன்னேற்றத்தைக் கவனிக்கத் தனி அமைச்சரை நியமிப்போம்' என்று கூறியிருக்கிறார்.

தொழிலாளர்களும், உழவர்களும், அன்றாடக் கூலிகளும் தான் நாட்டின் முதுகெலும்பு. இவர்கள்தான், பின் தங்கிய மக்களில் மிகப் பெருவாரியானவர்கள். எனவே இவர்கள் முன்னேற்றத்திற்கு எத்தனை சலுகைகள் காட்டினாலும் தகும், தகும், தகும். காலதாமதமின்றி இவர்களை முன்னேற்ற வேண்டியது தான், நாட்டின் அடிப்படையான வளர்ச்சிக்கு அடிப்படை.

ஜனத்தொகை பதிவு செய்வதில், உதவி செய்வதில், நிலச் சீர்திருத்தத்தில், சேரி ஒழிப்பில், படிப்புக்குத் தனி வசதி கொடுப்பதில், பழைய குற்ற பரம்பரையினர்க்கு மான்யம் அளிப்பதில், சமூக வளர்ச்சித் திட்டத்தில் பணம் ஒதுக்குவதில், தனி அமைச்சர் நியமிப்பதில்—இவ்வாறு பின் தங்கிய வகுப்பு மக்களை முன்னேற்றும் திசையில் இந்திய சர்க்கார் எடுத்துள்ள முடிவுகளைப் பொதுப்படையாக வரவேற்கிறோம்.

ஆனால் நல்லதைச் சொல்வதும், செய்வதற்கு மாருக அல்லது வேருக நடப்பில் இறங்குவதும் நமது சர்க்காரைப் பீடித்துள்ள நாட்பட்ட நோய் என்பதை நாம் பல துறையிலும் பல முறையிலும் எடுத்துக் காட்டி வந்துள்ளோம்.

பிற்பட்ட அடிப்படை மக்களின் முன்னேற்றம், உடனடியாக நடைமுறைக்கு வர எதுவும் தடையாக இருக்கக்கூடாது. சுயநல உள்நோக்கோடு, மேட்டுக் குடிமக்களும் அவர்களின் வாய்ப் பறைகளாக படித்த கூட்டமும் வாய்ப்பு-வசதி பெறுவதில் "எல்லோரும் ஒன்று" என்று ஏட்டுச் சுரைக்காய்-ஜனநாயகக் கிளர்ச்சியில் ஈடுபடலாம். சர்க்கார் அதற்கு மசியக்கூடாது.

ராஜ்ய சர்க்கார்களுக்கு, பின் தங்கிய வகுப்பார்களின் பட்டியல்-தயாரிப்புப் பணியை ஒப்படைத்திருப்பது, நடைமுறையை அனுமார் வால் மாதிரி நீட்டுமா? மத்திய சர்க்கார் தான் நடைமுறையில் பதில் சொல்லவேண்டும் இதற்கு.

## புதிய மந்திரிசபை

டாக்கா, செப். 6—

மந்திரிசபை அமைக்க அழைக்கப்பட்டிருக்கும் அடௌர் ரஹமான் தமது மந்திரிசபையில் தற்போதைக்கு 5 பேர் மந்திரிகளாக இருப்பார்களென்றும், இந்த எண்ணிக்கை சீக்கிரமே 11-ஆக உயர்த்தப்படுமென்றும் இன்று பத்திரிகை நிருபர் ஒருவருக்கு அளித்த பேட்டியில் தெரிவித்தார்.

# "சுமூகத் தீர்வு காணுவதில் அக்கரையில்லை"

## மேலைநாடுகள் மீது கெய்ரோ ரேடியோ கண்டனம்

### அராபிய சேனாதிபதிகள் கூடுகின்றனர்

லண்டன், செப். 4—

சூயஸ் நெருக்கடி தீருவதற்கு ஒரு பரிகாரம் காணுவதில் மேலைநாடுகள் தற்போது ஈடுபட்டிருந்தாலும், உண்மையில் அத்தகைய ஒரு சமரச உடன்பாடு ஏற்படக் கூடாதென்றே மேற்கு தேசங்கள் வெகு ஆவலோடு இருப்பதாக கெய்ரோ ரேடியோ இன்று அறிவித்தது.

ஈரான், எகிப்து, சிரியா, லெபனன் ஆகிய தேசங்களைச் சேர்ந்த பிரதம சேனாதிபதிகளின் கூட்டமொன்றைக் கூட்டுவதற்கு சௌதி அரேபிய மன்னர் அழைப்பு விடுத்துள்ளதாக கெய்ரோ ரேடியோ இன்று தெரிவித்தது.

### இறுதி பரிகாரம் ஏற்படாது

கெய்ரோ செப். 5—

மென்ஸிஸ்—நாஸர் பேச்சு வார்த்தைகள் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன. சனிக்கிழமைவரை இந்த சம்பாஷணைகள நீடிக்கும் என்று தெரிகிறது.

இந்த பேச்சு வார்த்தைகளின் விளைவாக ஒரு முடிவான பரிகாரம் ஏற்படுவது துர்லபமே என்று ஐவர் தூதுகோஷ்டி வட்டாரத்தைச் சேர்ந்த ஒரு முக்கியஸ்தர் குறிப்பிட்டார். எனினும், பிரச்னையைத் தீர்ப்பதற்கு உதவிகரமாக இருக்கும் வகையில், ஒரு பரந்த அளவில் நாசருடன் உடன்பாடு காணுவதற்கு சாத்திய[illegible]பதாக அவர் தெரிவித்தார்.

[illegible]ங்டன், செப். 5—

சூயஸ் நெருக்கடியை சமாதான முறையிலேயே தீர்க்க அமெரிக்கா ஆவல் கொண்டிருப்பதாக இன்று பத்திரிகை நிருபர்கள் கூட்டத்தில் பேசுகையில் ஐசன்ஹோவர் வெளியிட்டார். 1888-ம் வருட ஒப்பந்த அடிப்படையில், சமாதான காலத்திலும், யுத்தக்காலத்திலும் சூயஸ் கால்வாய் வழியாக சர்வதேசக் கப்பல் போக்குவரத்து குந்தகமின்றி நடக்க அமெரிக்கா விரும்புவதாகவும் அவர் கூறினர்.

### நேட்டோ கூட்டம்

பாரிஸ், செப். 5—

15 நாடுகளைக் கொண்ட வட அட்லாண்டிக் கவுன்சில் கூட்டம் இன்று இங்கு நடைபெற்றது. தற்காப்புக்காகவே பிரிட்டனும் பிரான்ஸும் ராணுவ முஸ்தீபுகளைச் செய்து வருவதாகவும், பிரச்னைக்கு ஒரு சுமுக[illegible] முயன்று வருவதாகவும்" பிரிட்டிஷ் வெளிநாட்டு மந்திரி ஷெல்வின் லாயிட் கூறினர்.

# இங்குள்ளதுபோல் சீனவில் அதிக ஏற்றத்தாழ்வு இல்லை!

## இந்திய தூதுகோஷ்டி கண்ட உண்மைகள்

புதுடெல்லி, செப். 5—

சீனவில் மிக உயர்ந்தபட்ச சம்பளத்திற்கும் குறைந்த பட்ச சம்பளத்திற்குமுள்ள வித்தியாசம் ரொம்பவும் குறைவாக உள்ளது என்கிற தகவலை அண்மையில் சீன சென்று திரும்பிய இந்திய தூதுகோஷ்டியினர் இன்று இங்கு வெளியிட்டனர்.

திட்டக்கமிஷன், உணவு, விவசாய இலாக்காக்களின் உயர்தர அதிகாரிகள் அடங்கிய இந்தத் தூதுகோஷ்டிக்கு, இந்திய சர்க்கார் உதவி உணவு மந்திரி எம். வி. கிருஷ்ணப்பா தலைவர்.

இந்தத் தூது கோஷ்டியினர் மேலும் கூறியுள்ளதாவது:

பீகிங்கில் சர்க்கார் அலுவலகங்களில் ஒரு பியூனுக்குக் கொடுக்கப்படும் குறைந்த பட்ச சம்பளம் 40 யுவான்கள், அதாவது ஏறக்குறைய 80 ரூபாய்கள். இது டெல்லியில் ஒரு 'சப்ராசி'க்கு (ப்யூன்) கொடுக்கப்படும் சம்பளத்திற்கு சமமானது தான். ஆயினும் சீனவில் உள்ள அதிகாரிகளுக்கு பொதுவாக 300 யுவான்களும், அதிகம் போனல் மிக உயர்ந்த அதிகாரிகளுக்குக் கூட 400 யுவான்களுமே கொடுக்கப்படுகிறது. மந்திரிகளுக்கும் கூட 400 யுவான்கள்தான் சம்பளம்!

### சிறு விதிவிலக்கு

இதற்கு விதிவிலக்காக 1000 யுவான்கள் வாங்குபவர்களும் இருக்கிறார்கள். சிறந்த கலைஞர்களும், முன்னாள் முதலாளிகளும் தான் இவர்கள். இந்த வகையைச் சேர்ந்தவர்கள் மிகக் குறைவான பேர்களே இருக்கிறார்கள்.

ஆகவே பொதுவாக குறைந்த பட்ச சம்பளம் 40 யுவான்கள் அதிகபட்ச சம்பளம் 400 யுவான்கள் என்றேதான் நாம் கொள்ளவேண்டும். இந்த வகையில் பார்த்தால் சீனவில்1–10 விகிதத்திலேயே சம்பளம் அமைந்துள்ளது!

(முதற் பக்கத் தொடர்ச்சி)

ஒரு சில பதவிகள் பின் தங்கியவர்களுக்கென ஒதுக்கப்படவேண்டும் என்ற யோசனை கமிஷனின் ஏகோபித்த சிபாரிசு அல்ல என்றும் தலைவரும் (அதாவது காக்கா கலேல்கரும்) ஒருசில மெம்பர்களும் (மைனாரிடி மெம்பர்கள்) ஒப்புக்கொள்ளவில்லை என்றும், கூறி இது சங்கடமும் தொல்லையும் பிடித்த விஷயமாதலால் இதை ஜாக்கிரதையாகப் பரிசீலிக்க வேண்டுமென்று இந்திய சர்க்கார் கூறுகிறது.

எஞ்சினியரிங், வைத்தியக் கல்லூரிகள் போன்றவைகளில்இடம் ஒதுக்கும் யோசனையைப் பிரஸ்தாபிக்கையில் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் முன்னேற தகுதியுள்ள அனைவர்களையும் சேர்க்கும் விதத்தில் இருக்க வேண்டுமென்றும், அவசியமானல் இதைப்பற்றி பின்னர் பரிசீலிக்கலாமென்றும் சர்க்கார் அறிக்கை அறிவிக்கிறது.

## வாளும் கேடயமும்

"மல்லன்"

"தேசம் முன்னேறி இருப்பதைக் கண்டு ஆங்கிலேயர்களும் ஆச்சரியப்படுகிறார்கள்"—நிதி அமைச்சர் பொள்ளாச்சியில் உதிர்த்த வாய்முத்து.

மெய்தான்! நமது நாட்டு முன்னேற்றத்தைக் கண்டு ஆங்கிலேயர்கள் ஆச்சரியப்படத்தான் செய்வார்கள்!

ஹார்வி, பஞ்சாலையில் லட்சம் லட்சமாகக் கொள்ளையடிக்கிறான். சுப்ரமண்யம் சர்க்கார் அவனுக்குக் கட்டும் காவலும் அளிக்கிறது

ஹார்வி மூலதனத்தைத் தேச உடைமை ஆக்கவேண்டுமென்ற சிங்கை, தூத்துக்குடி தொழிலாளித் தலைவர்கள் 7 ஆண்டுகளுக்கு மேல் சிறையில் கிடந்து வாடுகிறார்கள். தேசிய பரம்பரையில் வந்த இந்தத்தோழர்களின்விடுதலையைப் பற்றி சர்க்கார் கள்ளுண்ணி மொங்கனகை இருக்கிறது.

சுதந்திரம் வருமுன், "வெள்ளையனே வெளியேறு" என்ற கோஷத்தைக் கேட்டால்போதும், ஆங்கிலேயர்களுடைய ஈரற் குலை, வெட வெட என்று ஆடிற்று.

ஆனல், சுதந்திரம் வந்தபின் அந்நியர் கொள்ளை கூடியிருக்கிறது. கொட்டிய மூலதனம் அதிகரித்திருக்கிறது. பாதுகாப்பும் பெருகி இருக்கிறது.

பிரிட்டனில் இத்தகைய முன்னேற்றம் உண்டா? இல்லை. ஆகவே இந்த முன்னேற்றத்தைக் கண்டு ஆங்கிலேயர்கள் ஆச்சரியப் படுகிறார்கள். படாமல் வேறு என்ன செய்வார்கள்?

* * *

"நமது ராஜ்யத்தில் 3,500 கிராமங்களில் மின்சார வசதி, சேலத்தில் இரும்பு அலுமினியம் எடுக்க ஏற்பாடு, சென்னை சேது சமுத்திர அபிவிருத்தித் திட்டங்கள், மேட்டுப்பாளையத்தில் காகிதத் தொழிற்சாலை...... இவ்வளவும் செய்தபின் காங்கிரஸை ஏன் எதிர்க்கிறீர்கள்?"—அதே [illegible]டத்தில் சுப்ரமணியம் கேட்ட பலே கேள்வி.

நியாயந்தான்! இன்னும் எத்தனையோ வரப்பிரசாதங்களைக் காங்கிரஸ் ஆட்சி வருஷா வருஷம் நமக்கு அருளிவருகிறது.

சென்ற ஆண்டில் 15000 வியாபாரிகளுக்கு கம்பி எண்ணும் பாக்கியம் கிடைத்தது.

19 லட்சம் பேருக்கு 'டிக்கெட்' இல்லாமல் தென்பிராந்திய ரயில்வேயில் பிரயாணம் செய்ய 'சான்ஸ்' அடித்தது.

பருத்திச் சூதாட்டமும், கள்ளச் சாராயம் காய்ச்சலும் பெருந் தொழில்களாக வளர்ந்து வருகின்றன.

சென்னையில் வரவரத் திருட்டுகள் பெருகி வருகின்றன.

பொன்மலையில், வேலைக்கு ஆள் எடுப்பதாக அழைத்து, அதிகமான ஆட்கள வந்ததற்காக அடிதடிப் பிரசாதம் அருளப்பட்டிருக்கிறது.

நிலவெளியேற்றத்தால் மன்னார் குடி சப்-ஜெயில் விளிம்பு மறைந்து போய்கிறது.

அரிசி விலை அது போக்கில் ஏறுகிறது.

விசைத் தறியைக் கண்டு கைத் தறி கதிகலங்கி ஓலமிடுகிறது.

என். ஜி. ஓக்கள் அழுத கண்ணும் சிந்திய மூக்குமாகப் பணியாற்றுகிறார்கள்.

இவ்வளவு வரங்களையும் இன்னும் எத்தனை எத்தனையோ வரங்களையும் தந்த காங்கிரஸை ஏன் எதிர்க்கிறார்கள்? நன்றி இல்லாத நாசகாரிகள் இந்த எதிர்க்கட்சிக்காரர்கள். அதனுல்தான் எதிர்க்கிறார்கள்.

சுப்ரமண்யம் கேள்வி சரியான கேள்வி.

* * *

"காங்கிரஸுக்கு எதிர்ப்பு இன்று ஏற்பட்டதல்ல; அன்றும் ஏற்பட்டது"—அதே பேச்சில் நிதி அமைச்சர் சிந்திய கருத்து இது.

நிதி அமைச்சரே! காலம் மாறிப் போச்சு. காங்கிரஸ் தலைமையின் இடமும் நிலைமையும் மாறிப் போச்சு.

அன்று பிரிட்டிஷ் முதலாளிகளையும் நிலப் பிரபுக்களையும்—ஏகாதியத்ய வாதிகளையும் ஜஸ்டிஸ் கட்சியையும் எதிர்த்துப் போராடினீர்கள். இன்று அவர்களுக்கு வளைந்து கொடுக்கிறீர்கள். இழுத்த இழுப்புக்கெல்லாம் இசைகிறீர்கள்.

அன்று காங்கிரஸ் சிறை சென்ற காலம். இன்று காங்கிரஸ் அதிகாரச் செழிப்பில் மிதக்கும் காலம்.

அன்று மக்களோடு நின்று அடிபட்ட காலம். இன்று மக்கள் நெஞ்சுக்குத் துப்பாக்கிப் பிடிக்கும் காலம்.

ஆகவே அன்றும் காங்கிரஸ் எதிர்ப்பைச் சமாளித்தது; இன்றும் இனியும் சமாளிக்கும் என்று கூறி உங்கள்ால் ஊர் தலையில் மிளகாய் அரைக்க முடியாது.

எதிர்ப்பைச் சமாளிக்கும் காங்கிரஸ் தலைமையின் தனித்திறமை அகமதாபாத்தில்தான் சகச்சோதியாகப் பிரகாசித்ததே!

* * *

"பொறுப்பேற்க சந்தர்ப்பம் இல்லாதவர்கள் பொறுப்பற்றுப் பொய்ப் பிரச்சாரம் செய்கிறார்கள்"—அதே பேச்சில் மந்திரியின் ஒரு திருவாய் மலர்ச்சி இது.

அன்று அரசியல் மானத்தையும் தேசிய மானத்தையும் விற்றுவிட்டு, கொல்லைப்புற வழியாக நுழைந்து, முதலமைச்சரானர் ராஜாஜி. அந்தப் பொறுப்புடைமையைத் தலைமேல்தூக்கிவைத்து ஆடினர் அவருடைய பரமானந்த சீடரான சுப்ரமணியம். பொறுப்பேற்க தகுதியும் வாய்ப்பும் அருமையாகக் கிடைத்தது.

"தேவிகுளம்-பீர்மேட்டைக் கட்டாயம் நேருவிடம் வாங்கித் தருவேன்! என்று சட்ட சபையில் மார்தட்டினர். சுப்ரமணியம், டில்லியில் நேருவின் தீர்க்க தரிசனத்தைக் கண்ட பிறகு, தன் மூளை குருவி மூளை என்றும், தன் பார்வை மங்கல் பார்வை என்றும் ஒப்புக்கொண்டார். மீண்டும் சட்ட சபையில் "தேவிகுளம்—பீர்மேடு தமிழனுக்குக் கிடையாது" என்று பொறுப்புடன் அபசுரம் பேசினர்.

இத்தகைய ஆதிசேஷன், "பொறுப்பேற்க முடியாதவர்கள் பொறுப்பின்றிப் பொய் பேசுகிறார்கள்" என்று சொன்னல் எல்லோரும் 'ஓம்' என்று ஒப்புக்கொள்ள வேண்டியதுதான்.

## செப். 8. விநாயக சதுர்த்தி விடுமுறை

செப். 8-தேதி விநாயக சதுர்த்தியை முன்னிட்டு அன்று நம் அச்சகத்துக்கு விடுமுறை. ஆகவே சென்னை 8-9-56 (வெளியூர் 9-9-56)தேதிய ஜனசக்தி இதழ் வெளிவராது. ஆகவே வார மலர் சென்னையில் 9-9-56 (வெளியூரில் 10-9-56)ல் கிடைக்கும்.

## நடக்க இருப்பவை

மதராஸ் ஓட்டல் தொழிலாளர் சங்கம் பொதுக் கூட்டம் திருவல்லிக்கேணி கங்கண்ண மண்டபத்தில் 7–9–56 இரவு 10 மணிக்கு நடைபெறும். நேப்பியர் பார்க்கிலிருந்து இரவு 9-30க்கு ஊர்வலம் புறப்படும்.

● 8–9–56ல் ஸ்ரீ வில்லிப்புத்தூர் கம்யூனிஸ்ட் கட்சிப் பொதுக் கூட்டம். தோழர் ஜீவா பேசுவார்.

## ஏஜண்டுகள் கவனத்திற்கு

அன்பர்களே,

வாராந்திர பில்கள் பிரதி திங்களன்று இங்கிருந்து அனுப்பப்படும். சனிக்கிழமைக்குள் அந்த பில்லுக்குரிய பணம் இங்கு வந்து சேராவிடில் முன் அறிவிப்பின்றி பத்திரிகைகள் நிறுத்தப்படும் என்பதை கவனித்து நீங்கள் காலா காலத்தில் பணம் அனுப்பிவைக்கக் கோருகிறோம்.

நிர்வாகி,
ஜனசக்தி

# 33-வது பிரிவை திருத்தாதே!

## தமிழகமெங்கும் தொழில்-உறவு தினம்

தொழிலாளருக்கும் முதலாளிக்கும் ஏற்படும் தகராறு விசாரணையில் இருக்கும் கால கட்டத்தில், எந்த தொழிலாளி மீதும் நடவடிக்கை எடுக்கக் கூடாது என்றிருந்த தொழில் தகராறு சட்டத்தின் 33வது பிரிவை, தொழிலாளருக்கு விரோதமாக சர்க்கார் மாற்றிவிட்டது. அதைக் கண்டித்து 3-9-56-ல் ஆர்ப்பாட்டம் செய்யுமாறு அ. இ. தொ. ச. கா.ஸின், தமிழ்நாடு கிளை விடுத்த வேண்டுகோளுக்கிணங்க, தமிழக மெங்கும் தொழில் உறவு தின ஆர்ப்பாட்டங்கள் நடைபெற்றன.

### சென்னையில்

சென்னை, செப். 4—

நேற்று ஓட்டல் தொழிலாளர்கள் 250 பேர் ஊர்வலம் நடத்தி, தோழர் கே. ராகவ ராவ் தலைமையில் பொதுக் கூட்டம் நடத்தி, கண்டனத் தீர்மானம் நிறைவேற்றினர்கள். தோழர் கே. முருகேசன், எஸ். தீனதயாளு, சுந்தரம் ஆகியோர் பேசினர்கள்.

### மதுரை

மதுரை, செப். 4—

தொழில் உறவு சட்டத் திருத்தத்தை ஆட்சேபித்தும், சங்க அங்கீகாரம் வேண்டு மென்றும், புட்டுத்தோப்பு மைதானத்தில் இன்று ஏ. ஐ. டி. யு. சி. சங்கங்கள் சார்பில் தோழர் பி. கே. ராமசாமி தலைமையில் ஓர் மாபெரும் பொதுக் கூட்டம் நடந்தது. கூட்டத்துக்கு முன் மாபெரும் ஊர்வலமும் நடைபெற்றது. தோழர்கள்: எஸ். ராமகிருஷ்ணன், வி. கார்மேகம், எம். என். ஆதிநாராயணன், எஸ். பி. ஆண்டி ஆகியோர் பேசினர்கள்.

### சேலம்

சேலம், செப். 4—

மாக்னிசைட் தொழிலாளர்சங்க சார்பில் சங்க உபதலைவர் தோழர் பெருமா கவுண்டர் தலைமையில் நேற்று மிகப்பெரிய பொதுக்கூட்டம் நடைபெற்றது. தோழர்கள் நடையன், காரியதரிசி கே. பாலன் ஆகியோர் பேசினர்.

### தங்கவயல்

சாம்பியன் ரீப்ஸ், 4—

தங்கவயலில் சாம்பியன், மைசூர் மைன், மின்சாரம், ஆஸ்பத்திரி, சானிடரி டையரி, ஓட்டல் ஆகிய தொழிற்சங்கங்கள் அனைத்தும் தோழர் கே. எஸ். வாசன் எம். எல். ஏ. தலைமையில் மாபெரும் பொதுக்கூட்டம் நடத்தி தொழில் உறவு தினம் அனுஷ்டித்தனர். பல தலைவர்கள் பேசினர்.

### திருவொற்றியூர்

சென்னை, செப். 5—

தோல் பதனிடும் தொழிலாளர் சங்கம், லெதர் பாக்டரி (வாசர் கம்பெனி) ஆகிய தொழிலாளர் சங்கங்கள் சார்பில் தோழர் கே. பி. ரெட்டி தலைமையில் கண்டன தினம் நடைபெற்றது. தொழிலாளர் தலைவர்கள் வ. அ. ஞானசாமி, கலாமன்றத் தலைவர் எஸ். கிருஷ்ணமூர்த்தி, டி. நாராயணசாமி ஆகியோர் பேசினர்கள். தீர்மானங்கள் நிறைவேறின.

### மானாமதுரை

மானாமதுரை, செப். 3—

இங்கு ஓடு, மண்பாண்டம், உலோகம் ஆகிய தொழிலாளர் சங்கங்கள் சார்பில் தொழில்உறவு தினம் தோழர் சபாபதி தலைமையில் நடைபெற்றது. தோழர்கள் ஞானம், முத்து மாமுண்டி, எம். ஆர். ஆண்டவர், எம். வி. சந்தரம் ஆகியோர் பேசினர்.

### குடியாத்தம்

குடியாத்தம், செப். 4—

பீடி, முனிசிபல், தீப்பெட்டி, பஞ்சாலை ஆகிய தொழிற்சங்கங்கள் சேர்ந்து நேற்று தொழிலாளர் தலைவர் டாக்டர் ஜி. கண்ணபிரான் தலைமையில் தொழில் உறவுதினம் அனுஷ்டித்தார்கள். ராஜேஸ்வரி மில் தொழிலாளர்கள் ஓர் ஊர்வலம் நடத்தினர்கள். வி. கே. கோதண்டராமன், எஸ். மாணிக்கம், ஆலியார், அப்துல் ரஷீத் ஆகியோர் பேசினர்கள். பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

---

## பழனி காங்கிரஸில் பலத்த சண்டை

### அபேட்சகராக நிற்க பலமான போட்டி

பழனி, செப். 3—

மதுரை ஜில்லாவில் காங்கிரஸ் அபேட்சகர்களைத் தேர்ந்தெடுப்பதற்காக அபிப்பிராயம் திரட்டும் பொருட்டு தமிழ்நாடு காங்கிரஸால் நியமிக்கப்பட்ட சாத்தூர் ராமசாமிநாயுடு எம். எல். ஏ. நேற்று இங்கு வந்து அபேட்சகர்கள் சம்பந்தமான அபிப்பிராயங்களை சேகரித்தார். பழனி சட்டசபை தொகுதிக்கு 5 பேர்களும் பார்லிமெண்ட் தொகுதிக்கு (பொது, தாழ்த்தப்பட்டோர் இரண்டு ஸ்தானங்கள்) 13 பேர்களும் மனு செய்துள்ளதாகத் தெரிகிறது. பி. எஸ். கே. லட்சுமி பத்திராஜுவும், எஸ். கே. சின்னச்சாமிநாயுடு என்னும் பெரும் நிலச்சுவான்தாரும் முக்கியமானவர்கள். டி. ஜி. கிருஷ்ணமூர்த்தி கோஷ்டியும், தேனி தியாகராஜன் கோஷ்டியும் தம் தம் அபேட்சகர் தேர்ந்தெடுக்கப்படுவதற்கு பகீரதப்பிரயத்தனம் செய்து வருகிறார்கள். (ந. நி.)

---

## ஜமீன்-இனும் ஒழிப்பு டிரிபூனல்செல்லுமிடங்கள்

சென்னை, செப். 4—

ஜமீன்-இனும் ஒழிப்பு டிரிபூனல் (மதுரை) கீழ்வரும் ஊர்களுக்கு செல்லும் தேதிகள்.

பாளையம்கோட்டையில் செப்டம்பர் 6, 7 தேதிகள் தங்கும்.

சாத்தூரில்: 10ந் தேதி தங்கும்.

தேவகோட்டையில் 14ந் தேதி.

திருச்சியில் 20ந் தேதி.

ராமநாதபுரத்தில் 25ந் தேதி.

கோவையில்: 29ந் தேதி தங்கும்.

---

# சர்க்காருக்கு தைரியமுண்டா?

## காங்கிரஸ்காரரின் கேள்வி

### கி. உத்தியோகஸ்தர் மாநாட்டில் முழக்கம்

திருக்கோயிலூர், செப். 2—

தென் ஆற்காடு ஜில்லா கிராம உத்தியோகஸ்தர்கள் மகாநாடு இங்கு திரு. கே. எஸ். வெங்கடகிருஷ்ணரெட்டியார் தலைமையில் நடந்தது.

மகாநாட்டை ஆரம்பித்து வைத்த ரெவினியூ மந்திரி திரு. மாணிக்க வேலர் கிராம உத்தியோகஸ்தர்கள் கோரிக்கைகள் நியாயமானதென்றும் ஆனால் எந்தக் காரியத்தையும் அரசாங்கம் உடனடியாகக் கவனிக்க முடியாது என்றும் எந்த கட்சியும் ஒரே நாளில் பெரிய காரியங்களைச் சாதித்துவிட முடியாதெனவும் மந்திரி பேசினர்.

அடுத்து பேசிய திரு. டி. புருஷோத்தமன் எம். எல். சி. என். ஜி. ஓ. க்களுக்கு அளித்துள்ள கல்வி, வைத்திய சலுகைகளை கிராம உத்தியோகஸ்தர்களுக்கும் அளிக்க வேண்டும் என்றார்.

மேல் சபை உபதலைவர் திரு. ஏ. எம். அல்லாப்பிச்சை எம். எல். ஸி. கி. உ.க்களின் நியாயமான கோரிக்கைகளை ஆதரிப்பதாகக் கூறினர்.

இறுதியாக, உள்ளூர் பிரபல காங்கிரஸ் வாதி திரு. ராஜகோபாலன் அவர்கள் பேசும்போது, மக்கள் ஒத்துழைப்பில்லாத எந்தச் சட்டமும் தோல்வியடையுமென்றும், சட்டத்தால் சாதிக்க முடியாதவற்றை சம்பிரதாயத்தாலும் பழக்க வழக்கங்களாலும் சாதிக்க முடியுமென்றும், ஏட்டளவில் சட்டம் செய்துவிட்டு கைமுறையில் வேறு வகையில் நடைபெறுவதை தடுக்க வேண்டும் என்று கூறினர். மேலும் பேசும்போது, நிலச்சுவான்தார்கள் சர்க்காரை ஏமாற்றும் முறையில் உறவினர்கள் பேரில் நிலங்களை மாற்றி, சர்க்காரின் நியாயமான நோக்கத்தை தகர்த்தெறிந்து விடுவார்களென்றார். நாட்டிலுள்ள நிலங்களையெல்லாம் பொதுவுடமைச் சொத்தாக அறிவித்திட வேண்டும் என்றும், ஆனால் இந்த சர்க்காருக்கு அந்தத் துணிவில்லை யாது என்றும் கூறினர்.

---

## முதலாளி பின்வாங்கினர்!

நாகர் கோவில், செப். 3—

வடசேரி மணீஸ் வீவிங் பேக்டரி தொழிலாளர்கள் சங்கத்தில் சேர்ந்ததற்காக ஆத்திரங்கொண்டு, முதலாளி பாக்டரியை இழுத்துப் பூட்டிவிட்டார். ஆனல் தொழிற்சாலை முன்பு மறியல் செய்யப் போவதாக அகஸ்தீசவரம் தாலுகா கைத்தறி நெசவாளர்கள் அறிவிப்பு செய்யவே, இன்று கதவடைப்பை அவர் திரும்பப் பெற்றுக் கொண்டார்.

## 6 மாத போனஸ் வேண்டும்

### விஜயகுமார் மில் தொழில் சங்கக் கோரிக்கை

பழனி, செப். 2—

மதுரைப் பஞ்சாலைத் தொழிலாளர் சங்கத்தின் கிளையான விஜயகுமார் மில் தொழிற்சங்கநிர்வாகக் கமிட்டிக் கூட்டம் இன்று உபதலைவர் வி. எ. கருப்புசாமி தலைமையில் நடைபெற்றது. அப்போது 1955-ம் வருடத்திற்கு 6 மாத போனஸ் கேட்பதென்றும், நியாய விலைக் கடைகளைத் திறக்கும்படி சர்க்காரை வற்புறுத்தியும், அரசியல் கைதிகளை உடனடியாக விடுதலை செய்யும்படி கோரியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

## பொது ஸ்தாபனங்களில் மத வசூல்

நாகர்கோவில், செப். 3—

நாகர் கோவில் நகர சபை நடத்திவரும் தாய், சிசு பரிபாலன விடுதிகளில் காணிக்கைப் பெட்டிகள் வைத்து நோயாளிகளிடமிருந்து கத்தோலிக்க கன்னிகாஸ்திரிகள் காணிக்கை வசூல் செய்து வந்தார்கள். [illegible] நகரசபைக்கு சொந்தமான [illegible] ஸ்தாபனத்தில் ஒரு குறிப்பிட்ட மதத்தைச் சேர்ந்தவர்கள் மட்டும் காணிக்கை வசூல் செய்வது நியாயமற்றதென்றும், ஆகவே அதைத் தடை செய்யவேண்டும் என்றும் கோரி கம்யூனிஸ்ட் கவுன்சிலர் கே. ரங்கநாதன் வற்புறுத்தியதைத் தொடர்ந்து, தற்போது நகரசபைக்கு சொந்தமான எல்லா தாய், சிசுபரிபாலன விடுதிகளிலும், காணிக்கைப் பெட்டிகள் அகற்றப்பட்டு விட்டன. (ந. நி.)

---

# ஒற்றுமை அறைகூவலுக்கு

## ஹிந்து மஸ்தூர் சபா-ஐ.என்.டி.யு.ஸி. பதில்

புதுடெல்லி, ஆக. 31—

தொழிற்சங்க ஒற்றுமைக்கு அறைகூவல் விடுத்து அகில இந்திய தொழிற்சங்க காங்கிரஸின் ஜெனரல் கவுன்சில் கல்கத்தாவில் நிறைவேற்றிய தீர்மானம் இதர தொழிற்சங்க மத்திய ஸ்தாபனங்களுக்கு அனுப்பப்பட்டதையும் அந்த வேண்டுகோளுக்கு எச். எம். எஸ்., ஐ.என்.டி.யூ.சி. ஸ்தாபனங்கள் அளித்துள்ள பதிலையும் அ. இ. தொ. ச. காங்கிரஸ் காரியாலயம் வெளியிட்டிருக்கிறது.

அதன் சார்பில் அனுப்பி வைக்கப்பட்ட ஒற்றுமை மேடைத் திட்டம் பற்றி இந்த இரு மத்திய ஸ்தாபனங்களும் பரிசீலனை செய்து பதிலளிப்பதாகத் தெரிவித்துள்ளன.

## காட்டிலாகா அதிகாரியுடன் பேட்டி

பழனி, செப். 3—

விருப்பாட்சியில் முகாம் செய்திருந்த உதவி காட்டிலாகா அதிகாரியை இன்று கரட்டுப்பட்டி விவசாயச் சங்கத்தைச் சேர்ந்த முத்துராஜ், ஹமீதா, வெள்ளைச்சாமிஆகியோர் பேட்டி கண்டனர். காட்டில் மூங்கில் வெட்டிக் கொண்டுவந்து பிழைக்கும்400க்கு அதிகமானவர்களுக்கு, அவர்களது பிழைப்பு நடக்கும் வகையில், கூப் காண்டிராக்டுக்கு விடும் வரை, மூங்கில் வெட்டிக் கொண்டு வர அனுமதி சீட்டுகள் வழங்க வேண்டுமென்று அவர்கள் எடுத்துக் கூறினர். இது சம்பந்தமாக உடனடியாக ஆவன செய்வதாக அதிகாரி உறுதி கூறினர். (ந.நி.)

## லஞ்சம் வாங்கினதாக பிஹார் அதிகாரி கைது

### அவரிடம் ரூ. 5000 நோட்டுகள் இருந்தன

பாட்னா, செப். 4—

பிஹார் சிவில் சர்வீஸைச் சேர்ந்த ஒரு உயர்ந்த சர்க்கார் அதிகாரி இன்று காலை லஞ்ச-ஒழிப்பு இலாகா அதிகாரிகளால் கைது செய்யப்பட்டார். இந்த செய்தி பாட்னா ஜங்ஷன் ரயில்வே ஸ்டேஷனில் ஒரே பரபரப்பை உண்டாக்கிவிட்டது.

கைது செய்யப்பட்டவரிடம் ரூ. 5000 மதிப்புள்ள கரன்ஸி நோட்டுகள் இருந்தனவாம்.

இந்தப் பணத்தை நேற்றைய தினம் அவர் வேறு நகரத்தில் ஒருவரிடம் லஞ்சமாகப் பெற்றாராம். அந்த நோட்டுகளில் ஒரு விசேஷ மாஜிஸ்ட்ரேட்டின் கையெழுத்துக்கள் போடப்பட்டிருந்தனவாம்.

---

## சீனக் கம்யூனிஸ்ட் மகாநாட்டுக்குச் செல்ல 'பாஸ்போர்ட்' கிடைத்து விட்டது!

புதுடில்லி, செப். 4—

சீனக் கம்யூனிஸ்ட் கட்சிக் காங்கிரசுக்கு (மகாநாட்டுக்கு) இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் சகோதரப் பிரதிநிதிகளாக, செல்ல விருக்கும் தோழர்கள் இ.எம்.எஸ். நம்பூதிரிப்பாட், பி. சுந்தரய்யா, பி.ஸி. ஜோஷி ஆகியோர் செப். 9ந் தேதியன்று புதுதில்லியை விட்டு பீகிங்குப் புறப்படுவார்கள் என்று தெரிகிறது. தோழர் நம்பூதிரிப்பாட் சீன செல்ல 'பாஸ்போர்ட்' வேண்டுமென்று கோரியிருந்தார். சமீபத்தில் அது கிடைத்துவிட்டது.

---

# விஷம்போல் ஏறுது அரிசி விலை!

## நெல்லூரிலேயே படி விலை ரூ. 1-0-6

நெல்லூர், செப். 2—

நெல்லின் விலை இங்கு கிடுகிடு வென்று உயர்ந்து வருகிறது. 1876 ராத்தல் கொண்ட 'புட்டி' ஒன்றுக்கு இந்த வாரத்தில் ரூ. 350 வரை விலை உயர்ந்துள்ளது. கடந்த ஒரு மாதத்திற்குள் ரூ. 300 லிருந்து 350 ஆக உயர்ந்துள்ளது. இதற்கேற்றாற்போல் அரிசி விலையும் ஒரு மூட்டை ரூ. 39 லிருந்து (160 ராத்தல்) ரூ. 46 வரை உயர்ந்துள்ளது. சில்லரை விலைகளும் உயர்ந்துள்ளன. மதராஸ் பட்டணம் படி அரிசி விலை ரூ. 1-0-6.

விஷம்போல் ஏறியுள்ள இந்த விலை உயர்வு ஏராளமான குடும்பங்களின் பொருளாதாரத்தை இங்கு பாதித்துள்ளது. இதனல் மக்கள் பெரிதும் கவலையடைந்துள்ளனர். விலைகள் மேலும் உயருமென்றும் பீதி இருக்கிறது.

அரிசி விலை உயர்வைத் தொடர்ந்து இதர பொருள்களின் விலைகளும் உயர்ந்துள்ளன.

நெல்லூர் அரிசி மட்டுமன்றி, சர்க்கார் ஜில்லாக்களின் அரிசியும் விலை உயர்ந்துள்ளது. முன்பு இது விலை குறைவாயிருந்ததால் நெல்லூர் வியாபாரிகள் இதை இறக்குமதி செய்து வந்தனர். இப்பொழுது நிறுத்திவிட்டனர்.

இன்னும் விலை உயரலாம் என்ற நம்பிக்கையில், லாபத்தின் மீது கண் வைத்து, பெரிய நிலச்சுவான்தார்கள் பதுக்கிவைத்திருந்த ஏராளமான நெல்லை விற்பனைக்கு வெளியிடாமல் பதுக்கி வைத்துள்ளார்கள்.

## கடன் வசூலிப்பு லட்சணம்!

பழனி, செப். 3—

சென்னை அரசாங்கம் வெளியிட்டிருக்கும் கடனுக்கு, கடன் பத்திரங்கள் வாங்கும்படி சர்க்கார் அதிகாரிகள் சிறு வியாபாரிகளை ரொம்பவும் வற்புறுத்தியிருக்கிறார்கள். சில சமயங்களில் ஒரே வியாபாரியிடம் தனித் தனியாக பல அதிகாரிகள் சென்று கடன் பத்திரம் வாங்கும்படி அதிகாரம் செய்து வருவதாக தெரிகிறது. இதனல் சிறு வியாபாரிகள் மிகவும் அதிருப்தி அடைந்துபோயுள்ளனர். (ந. நி.)

## தெய்க்காரப்பட்டி மைனரின் சுரண்டல்

பழனி, செப். 3—

பெரும் நிலப்பிரபுவான நெய்க்காரப்பட்டி மைனருக்கு சொந்தமான ராஜாத்தா மில் கடந்த 1 வருஷ காலமாக ஓடிக்கொண்டிருக்கிறது. அப்படியிருந்தும் மில் ஆரம்பமானது முதல் இன்று வரை வேலை செய்துவரும் தொழிலாளர்களுக்கு இதுவரை 'டிக்கெட்' கொடுக்கப்படவில்லை. அதோடு அதிகமான வேலைப் பளுவைத் திணித்து, சம்பளத்தையும் மிகவும் குறைத்துத் தருகிருர். இந்த அநீதியை எதிர்த்து நிற்க சகலத் தொழிலாளர்களும் ஒன்றுதிரண்டு வருகிறார்கள்.

---

## சென்னை மார்க்கெட்

### தங்கம் வெள்ளி

சென்னை, செப். 6—

| | |
|---|---|
| சவரன் | 68-0-0 |
| தங்கம் ரெடி | 104-8-0 |
| மூசை தங்கம் | 103-0-0 |
| வெள்ளி 100 தோலா எடை | 175-8-0 |
| வெள்ளி 1 ரூபாய் எடை | 1-12-6 |

### மணிலாப்பயறு

| | |
|---|---|
| 531 ரா. கொண்ட பாரம் 1-க்கு விற்பனைவரி உள்பட புதிய சரக்கு உயர்ந்த ரகம் | 173-0-0 |
| சாதா | 170-0-0 |

### மணிலா எண்ணெய்

| | |
|---|---|
| 500 ரா. கொண்ட பாரம் 1-க்கு எக்ஸ்பெல்லர் ரெடி (மதராஸ்) கிடங்கு டெலிவரி 3% F. F. A. (மொத்த விலை ரெடி) | 322-0-0 |
| செப்டம்பர் | 320-0-0 |

### விளக்கெண்ணெய்

| | |
|---|---|
| 500 ரா. கொண்ட பாரம் 1-க்கு (மதராஸ் கிடங்கு டெலிவரி) திருப்பத்தூர் | 295-0-0 |
| சேலம் "தாமரை" "அன்னம்" (37½ ரா. டின் உள்பட) | 23-0-9 |

### தேங்காய் எண்ணெய்

| | |
|---|---|
| 7½ ரா. கொண்ட டின் 1-க்கு (விற்பனை வரி தனி) கொல்லம் சரக்கு எம். எஸ். மார்க் | 27-12-9 |
| ராஜா மார்க்கு | 27-0-9 |
| அம்பு மார்க்கு | 27-0-9 |

### சர்க்கரை

| | |
|---|---|
| (எக்ஸைஸ்வரி விற்பனை வரி உள்பட) பிரிட்டிஷ் சுத்தம் செய்யப்பட்ட சர்க்கரை (2 அந்தர்) | 92-0-9 |
| கான்பூர் (229 ரா.) | 95-0-9 |
| முதல் | 96-0-9 |
| சாமல் கோட்டை (2 அந்தர்) | 94-5-9 |

# நிலக்கரித் தொழிலுக்கான யந்திர-தளவாட தொழிற்சாலை

## இந்தியாவில் நிறுவ சோவியத் உதவி

புதுடில்லி, செப். 4—

நிலக்கரி சுரங்க வேலைகளை நடத்துவதற்கான யந்திரங்கள் தளவாடங்களை இந்தியாவிலேயே செய்வதற்கு அவசியமான ஒரு தொழிற்சாலையை ஸ்தாபிப்பதற்கு வேண்டிய உதவிகளைச் செய்ய சோவியத் யூனியன் முன்வந்திருக்கிறது. இந்த தொழிற் சாலையை நிறுவ ரூ. 30 கோடி பெறுமான முள்ள யந்திரங்கள் இறக்குமதி செய்யவேண்டும். இது ஸ்தாபிதமானல் 3 கோடி 80 லட்சம் டன்னிலிருந்து, 6 கோடி டன் வரை நிலக்கரி தோண்டி எடுக்கமுடியும்.

## ஸ்ரீ கிருபலானி சீனு செல்லுவார்

புதுடில்லி, செப். 4—

பிரஜா-சோஷலிஸ்ட் தலைவர் ஸ்ரீ. ஜே. பி. கிருபலானி இம்மாத இறுதியில் சீனுவுக்குப் புறப்படவிருக்கிறார். லோக சபையின் சபாநாயகர் ஸ்ரீ. அனந்தசயனம் அய்யங்கார் தலைமையில் சீனு செல்லவிருக்கும் 24 பார்லிமெண்ட் அங்கத்தினர்களின் தூதுகோஷ்டியில் கிருபலானியும் ஒருவர். அவர்கள் செப். 27ந் தேதி புறப்படுகிறார்கள்.

சுமார் ஒரு மாத காலம் அவர்கள் சீனுவில் சுற்றிப் பிரயாணம் செய்வர்.

## அ. இ. கிஸான் சபையின் தேர்தல் கொள்கை

புதுடெல்லி, செப். 3—

அகில இந்தியக் கிஸான் சபை முன் வைக்கும் கோரிக்கைகளை ஆதரித்து முன்வரும் அபேட்சகர்களை கட்சி பேதமின்றி ஆதரிக்கும் கொள்கையை அ. இ. கி. ச. பொதுத் தேர்தலில் அனுஷ்டிக்கும் என்று தெரியவருகிறது.

நிலச் சீர்திருத்தம், நிலவுடைமைக்கு வரம்பு இவைபற்றித் திட்டக் கமிஷன் சிபார்சுகளை ஒரு வருட காலத்திற்குள் அமுல்நடத்த வேண்டும் என்றும், நிலவரி தண்ணீர் தீர்வை, அபிவிருத்தி வரி இவற்றை உயர்த்தக் கூடாதென்றும், விளைபொருள்களுக்கு நியாய விலை வேண்டும் என்பதும் அதன் பிரதான கோரிக்கைகள்.

கிஸான் சபையில் 6 லட்சத்தி 93 ஆயிரம் உறுப்பினர்கள் இருக்கின்றனர்.

# பாரதிதாசனின் விபரீதப்போக்கு

## புதுவை முனிசிபல் உபதேர்தல்

புதுவை, செப். 5—

ஸ்ரீ முத்துப்பிள்ளை காலமானதால ஏற்பட்ட முனிசிபல் உபதேர்தல் செப்டம்பர், 23-ம் தேதி நடக்கவிருக்கிறது. முன்னர் மக்கள் முன்னணி அபேட்சகராக நின்ற வக்கில் ஜீவரத்தினம் இப்போது காங்கிரஸ் அபேட்சகராக நிற்கிறார். மக்கள் முன்னணி சார்பில் பெண்கள் சங்கத் தலைவர் திருமதி. சரஸ்வதி சுப்பையா நிற்கிறார்.

இங்கிலையில், கடந்த ஏப்ரல் 18-ம் தேதி நடந்த புதுவை ராஜ்ய அசெம்பிளிக் கூட்டத்தில் காங்கிரஸில் உள்ள பிளவு காரணமாக மந்திரிசபை மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் வரவிருந்தது. மக்கள் முன்னணி சார்பில் தேர்ந்தெடுக்கப்பட்ட ஸ்ரீ பாரதிதாசன் அப்போது சபையில் உட்கார்ந்திருந்தார். அவர் காங்கிரஸ் எண்ணிக்கையையும் எதிர்தரப்பு எண்ணிக்கையையும் எண்ணிப் பார்த்துவிட்டு திடீரென்று எழுந்து வெளியே போய்விட்டார், இதனால் நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டு வர விருந்த எதிர்க்கட்சிதரப்பினர் ஆளும் கட்சியைவிட ஒரு ஓட்டு தமக்குக் குறைவாக இருக்கிறதென்று நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டு வரவில்லை.

பின்னர் பாரதிதாசனிடம், வெளியேறியதின் காரணத்தை மக்கள் முன்னணியினர் கேட்டபோது, தம்மை மக்கள் முன்னணியினர் மதிக்காமலிருப்பதால், அதை உணரச் செய்யவே அப்படி வெளியேறினேன் என்று கூறியதாகத் தெரிகிறது. இதன் பேரில் பாரதிதாசன் மக்கள் முன்னணியிலிருந்து வெளியேற்றப்பட்டார்.

அவர் இப்போது, மக்கள் முன்னணி ஓட்டுகளைப் பிளவுபடுத்தி காங்கிரஸை ஜெயிக்க வைக்க சுயேச்சை பெரியசாமியை ஆதரித்து வருகிறார். இதற்கு பல காங்கிரஸ்காரர்களும் ஆதரவளிக்கிறார்கள். (க.நி.)

## ஆசிரியர்களுக்கு இன்ஷூரன்ஸ் பென்ஷன் திட்டம்

சென்னை, செப். 4—

மானேஜ்மெண்டுகளின் கீழும், ஸ்தல ஸ்தாபனங்கள் கீழும், உள்ள ஆசிரியர்களுக்கு பிராவிடெண்ட் பண்ட்-இன்ஷூரன்ஸ் திட்டம் ஏற்படுத்தச் சர்க்கார் முடிவு கட்டியுள்ளது. சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்கு உள்ளது போன்ற திட்டம் போலவே இது இருக்கும். 40 வயதுக்குட்பட்ட ஆசிரியர்களுக்குக் கட்டாய இன்ஷூரன்ஸ் திட்டம் கொண்டுவரப் போவதாகவும் தெரிகிறது.

ஆசிரியர்கள் உத்தியோகத்தில் ஒய்வு பெறும் காலத்திற்கான சர்க்காரால் ஏற்கனவே அறிவிக்கப்பட்ட சலுகைகள் 1955 ஏப்ரல் 1ந் தேதியிலிருந்தே அமுலுக்கு வரும்.

## செப்டம்பர் 26க்கு பொள்ளாச்சியும் தயார்

பொள்ளாச்சி, செப். 3—

நகரசுத்தி தொழிலாளர்களின் 22 கோரிக்கைகளை வலியுறுத்தி, 26-9-56 ல் ஒருநாள் அடையாள வேலை நிறுத்தம் செய்வதென தோழர் எல். பழனிச்சாமி தலைமையில் நடைபெற்ற முனிசிபல் தொழிலாளர் சங்க மகா சபைக் கூட்டத்தில் தீர்மானம் நிறைவேறியது. சங்கக் காரியதரிசி என். ராமசாமி பேசினார். அதிகாரிகளுக்கு நோட்டீஸ் கொடுத்தாய் விட்டது. அரசியல் கைதிகளை விடுவிக்குமாறும் தீர்மானம் நிறைவேறியது.

# ஆயுதங்களைக் குறை

## பிரிட்டிஷ் தொழிற் சங்க காங்கிரஸ் அறைகூவல்

பிரிட்டன், செப். 4—

ஐ. நா. ஸ்தாபனத்தின் மூலம் ஆயுதக் குறைப்பை அமுல் நடத்த சர்க்கார் வலியுறுத்த வேண்டும். இரண்டாண்டு காலங்களுக்கு கட்டாய ராணுவ சேவையை ரத்தாக்க வேண்டும் என்று எண்பது லட்சம் தொழிலாளர்களைப் பிரதிநிதித்துவப் படுத்தும் பிரிட்டிஷ் தொழிற்சங்கக் காங்கிரஸ் மகாநாடு ஏகமனதாக ஒரு தீர்மானத்தை நிறைவேற்றியது.

இவ்வருட தொழிற்சங்க காங்கிரஸ் மகாநாட்டில் ஆயிரம் பிரதிநிதிகளுக்கு மேல் திரண்டிருந்தார்கள். ஆயுதக் குறைப்பு விஷயத்தில் ஐ. நா. பலவீனமாக இருப்பதற்கு நமக்குப் பொறுப்பில்லையா? என்று தீர்மானத்தை பிரேரேபித்த ஏ. ஜி. டாங்கின்ஸ் கேட்டார்,

இம் மகாநாடு தொ. ச. காங்கிரஸின் 88-வது மகாநாடாகும்.

## தொழிற்கட்சி உறுப்பினர் 90000 குறைந்தன

லண்டன் செப். 4—

கடந்த ஆண்டு முடிவில் பிரிட்டிஷ் தொழிற்கட்சி உறுப்பினர் தொகையில் 90 ஆயிரம் குறைந்திருப்பதாக நிர்வாகக் கமிட்டி அறிக்கை கூறுகிறது. மூன்று வருடங்களாக இவ்வாறு இறங்குமுகத்தில்தான் இருந்து வருகிறதாம்.

## 10 கோடி ரூபாய் வர்த்தகம்

### அரசாங்க வர்த்தக நிறுவனம் நடத்தியுள்ளது

புதுடெல்லி, செப். 4—

அரசாங்க வர்த்தக நிறுவனம் இதுவரையில் பத்துக் கோடி ரூபாய் மதிப்புள்ள வர்த்தகம் நடத்தியுள்ளதாகத் தெரிய வருகிறது. தேயிலை, தோல், துணி, கம்பளித் துணி, சிமெண்ட், சோடா, எண்ணெய்கள் இவற்றைப் பிரதானமாக ஏற்றுமதி செய்திருக்கிறது. கம்யூனிஸ்ட் நாடுகளுடன் கணிசமான வர்த்தகம் நடத்தியிருக்கிறது.

## கிருஸ்தவ மிஷனரிகளுக்கு

### ரூ. 9 கோடி அந்நியப் பணம்

புதுடெல்லி, செப். 4—

கிருஸ்தவ மிஷனரிகளுக்கு வருஷத்தில் 9 கோடி 13 லட்சம் ரூபாய் வெளிநாடுகளிலிருந்து வந்தது என்றும் இதில் அமெரிக்காவிலிருந்து 6 கோடி 91 லட்சம் ரூபாய் வந்தது. இந்தப் பணம் மிஷனரி வேலைகளுக்காக உபயோகப்பட்டதாகவும் முதலீடு செய்வது தவிர இதர வேலைகளுக்கு வெளிநாட்டுப் பணம் உள்நாட்டுக்குள் வருவதற்குத் தடை எதுவும் இல்லை என்று லோக சபையில் கேள்விகளுக்குப் பதிலளிக்கும் போது மந்திரி தத்தா கூறினார்.

அந்நிய கிருஸ்தவ மிஷனரிகள் இந்தியாவிற்கு விரோதமான நடவடிக்கைகளில் இறங்கி வருகின்றனவா? என்று திரு. கிருஷ்ணசார்ய ஜோஷி கேட்டார். நிர்ப்பந்தமாக மதமாற்றம் நடக்கிறதா என்று திரு. பி. எஸ். மூர்த்தி கேட்டார்.

## அ. இ. ரேடியோ அதிகாரிகள்

### ரஷ்யா விஜயம்

புதுடெல்லி, செப். 3—

சோவியத் ரேடியோ ஒலிபரப்பு முறைகளைக் கற்று ஆராயவும், குறிப்பாக பல்வேறு பிரதேச மொழிகளில் ஒலிபரப்பும் திட்டங்களின் இணைப்பு பற்றி ஆராயவும் அகில இந்திய ரேடியோ இலாக்காவிலிருந்து 4 இந்திய அதிகாரிகள் ரஷ்யாவுக்கு செல்லவிருக்கிறார்கள். அவர்கள் ரஷ்யாவில் 4 வாரங்கள் தங்குவர்.

## இந்திய இன்ஜினீயர்களுக்கு ரஷ்யாவில் பயிற்சி

பம்பாய், செப். 4—

பிலாய் எஃகு ஆலைத்திட்ட ஒப்பந்தப்படி, ரஷ்யாவில் தொழில் நுணுக்க நிபுணர்களாகப் பயிற்சி பெறுவதற்காக 50 பேர் பட்டதாரிகளும், இன்ஜினீயர்களும் கொண்ட முதல் கோஷ்டியினர் இன்று விமான மூலம் சோவியத் யூனியனுக்குப் புறப்பட்டனர். இவர்கள் அங்கு 9 மாதங்கள் பயிற்சி பெறுவர்.

இதே பயிற்சிக்காக மற்றும் 30 பேர் இம்மாத இறுதியில் சோவியத் யூனியனுக்குப் புறப்படுவார்கள்.

## லாரி மீது ரயில் மோதி விபத்து!

குடியாத்தம், செப். 3—

நேற்று இரவு பெங்களூரிலிருந்து, சென்னைக்கு சென்றுக் கொண்டிருந்த பாசஞ்சர் ரயில், காட்பாடியைத் தாண்டி, திருவலம் ரயில்வே ஸ்டேஷனுக்கு, போய்க் கொண்டிருந்தபோது, "ரெயில்வே கேட் ஒன்று மூடாமல் இருந்ததால், சென்னைக்கு போய்க் கொண்டிருந்த லாரி ஒன்று, இந்த ரயில்வே கேட்டை தாண்டிச் செல்ல எத்தனித்தபோது, பாசஞ்சர் ரயில் மோதியதால், லாரி தூக்கி எறியப்பட்டு, பலத்தசேதம் ஏற்பட்டது. லாரி டிரைவர் ஸ்தலத்திலேயே மரண மடைந்தார். மற்றும் லாரியில் இருந்த 6 பேருக்கு பலத்த காயம் ஏற்பட்டது. (ந. நி.)

## உழைக்கும் பத்திரிகையாளர் சம்பள நிர்ணய போர்ட்

### செப். 15 முதல் 21 வரை சென்னையில் விசாரணை

சென்னை, செப். 4—

உழைக்கும் பத்திரிகையாளர் சம்பள நிர்ணய போர்ட் செப்டம்பர் 15 முதல் 21ந் தேதி வரையில் சென்னையில் விசாரணை நடத்தும். இக்கூட்டம் சேப்பாக்கம் பொது மராமத்து இலாகா காரியாலயத்தி லுள்ள நூல் நிலையத்தில் நடைபெறும். பத்திரிகைத் தொழிலில் கண்ணும்கருத்துமுள்ள பத்திரிகையாளர் சங்கங்கள், பத்திரிகை உரிமையாளர் முதலியோர் விசாரணைக் கமிட்டிமுன் தம் கருத்துக்களைக் கூறலாம்.

# சைப்ரஸ் விடுதலைக்கு கிரேக்கப் பட்டாளம்

## வெள்ளையனை விரட்டுவோம் என கர்ஜனை

ஏதென்ஸ், செப். 3—

சைப்ரஸின் விடுதலைக்காக கிரேக்கப் பட்டாளம் ஒன்று அமைக்கப்பட்டுள்ளதாக இன்று ஏதென்ஸில் மக்களிடையே விநியோகிக்கப்பட்ட ஒரு பிரகடனம் அறிவிக்கிறது.

சைப்ரஸை ஆக்ரமித்துக் கொள்ள பிரிட்டிஷ்காரர்களையும் அவர்களது ஏஜண்டுகளையும் சைப்ரஸைவிட்டுவிரட்டியடிப்பதே இந்த கிரேக்கப் பட்டாளத்தின் பிரதான நோக்கம் என்று அந்தப் பிரகடனம் கூறுகிறது.

தற்போது பிரெஞ்சுக்காரர்களும் சைப்ரஸில் இறங்கி இருப்பதால் அவர்களும் விரோதிகளாகக் கருதப்படுவார்கள் என்று அந்தப் பிரகடனம் மேலும் அறிவிக்கிறது.

## நிறவெறியாட்டம் அதிகரிக்கிறது

### கலகக்காரர் 15 பேர் கைது

கிளிண்டன், செப். 4—

பள்ளிக்கூடங்களில் வெள்ளை நிற மாணவர்களுடன் நீக்ரோ மாணவர்களும் சேர்ந்து படிக்கலாம் என்ற முடிவை எதிர்த்து இங்கு நிறவெறியர் செய்த கலகத்தின் விளைவாக 15 பேர் கைது செய்யப்பட்டுள்ளனர். நீக்ரோ மக்கள் வாழும் பகுதிகளில் டைனமெட் வெடிகள் வைத்துள்ளனர். பலவிடங்களில் நீக்ரோக்களைத் தாக்கியுள்ளனர்.

நீக்ரோ மாணவர்களைச் சேர்த்துக் கொள்ள முடிவு செய்த பாடசாலை நிர்வாகத்தை எதிர்த்து நிறவெறியர் தொடுத்த வழக்கு டென்னஸி சுப்ரீம் கோர்ட்டால் தள்ளப்பட்டது.

## 700 விவசாயிகள் பொங்கி யெழுந்தனர்

முசிரி, செப். 3—

ஆமூரில் சென்ற ஆண்டு சாகுபடி செய்த அண்ணுவி என்ற விவசாயி, இந்த வருடமும் உழுது நாற்று நட்டார். மணிவேல் பிள்ளை என்ற மிராசுதார் நேற்று 70, 80 அடியாட்களுடன் அரிவாள், தடி சகிதம் வயலுக்குச் சென்று வேலிபோட்டார். விவசாயி தடுத்துக் கேட்கவே, அவரை குண்டர்கள் அடிக்க வந்தார்கள். விவசாயி ஓடி வந்து விஷயத்தை ஊரில் சொல்லி விட்டார். உடனே 700 விவசாயிகள் ஊர்வலமாகத் திரண்டு வேலியை அப்புறப்படுத்தி விட்டார்கள். மிராசுதாரின் முயற்சி தோற்றது. போலீஸில் விவசாயி ரிப்போர்ட் செய்திருப்பதாக தாலூகா வி. ச. காரியதரிசி ஜி. ஜி. ராகவன் தெரிவிக்கிறார்.

## பொதுநல சேவா மன்ற ஆண்டு விழா

சென்னை, செப். 4—

புதுப்பாக்கம் பொதுநல சேவா மன்றத்தின் ஆண்டுவிழா 2-9-56ந் தேதி விமரிசையாக நடைபெற்றது. விசேஷமாக ஏற்பாடு செய்த இந்த சீனப் படக் காட்சியைப் பலர் கண்டு களித்தனர். காலையில் கொடியேற்று விழா, ஏழைகளுக்கு அன்னமளித்தல் பிறகு மாலை பொதுக் கூட்டம் நடைபெற்றது. பா. புண்ணியகோடி தலைமை வகித்தார். என். ஆர். கோபால் அறிக்கை சமர்ப்பித்தார். மன்ற வேலைகளைப் பாராட்டியும் குடிமனைப் பிரச்சினை, விலைவாசி இவை பற்றியும் தோழர் ஜீவா பேசினார். கா. மு. கணேசன், வி. பி. முருகையன், கே. முருகேசன் முதலியோரும் பேசினார்கள். ஆர். கோவிந்தன் நன்றி கூறினார்.

# சுதந்திரத்தின் விலை 3000 தலைகள்!

அல்ஜீயர்ஸ், செப். 3—

1954ல் அல்ஜீரிய விடுதலைக் கிளர்ச்சி ஆரம்பமானது முதல் இந்த வருடம் ஆகஸ்ட் 1-ம் தேதி வரை 3,000 தேச பக்தப் பொது மக்கள் கொல்லப்பட்டுள்ளதாக இன்று இங்கு அதிகாரப்பூர்வமாக அறிவிக்கப்பட்டது. பிரான்ஸ் தேசம் தனது நாட்டவர் இங்கு கணிசமான அளவில் இருக்கின்றனர் என்னும் காரணம் காட்டி கடந்த இரண்டாண்டுகளாக அல்ஜீரியாவுக்கு விடுதலை கொடுக்காது கொடிய ராணுவத் தாக்குதல் நடத்திவருவது இங்கு நினைவு படுத்தற்குரியது.

## விசைத் தறிக்கு எதிர்ப்பு

மதுரை, ஆக. 31—

மதுரை நரிமேடு சுபாஸ்சந்திர போஸ் வாசக சாலையின் நிர்வாகக் குழுக் கூட்டம் திரு. சுந்தரக் கொத்தனார் தலைமையில் இன்று நடைபெற்றபோது, இந்த மாகாணத்தில் விசைத் தறிப் புகுத்துவதை வன்மையாகக் கண்டித்து வாசகசாலை செயலாளர் ரா. மீனாட்சிசுந்தரம் கொண்டுவந்தத் தீர்மானம் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டது.

Regd. No.M. 5934

Printed & Published by S. KRISHNASWAMY, at Janasakthi Press. (Phone 2241) 32, Broadway, Madras-1.
Editor: P. JEEVANANDAM

REGISTERED AS A NEWS PAPER IN CEYLON